18th February 1959]

Sri K. SATTANATHA KARAYALAR : யாராவது தனி நபர் இந்தத் தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்று உதவி கோரியுள்ளார்களா?

The Hon. Sri R. VENKATARAMAN : "லைன் பிராண்ட் அம்ப்ரலா மான்யுபாக்சரிங் கம்பெனி", மதுரை இதை ஆரம்பிப்பதற்கு யோசனை செய்துக்கொண்டிருக்கிறார்கள்.

### *Hurricane Lantern Factory at Palani*

*388. *Q.*—Sri P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பழனி அரிக்கன் லைட் தொழிற்சாலையில் இதுவரை எத்தனை அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி செய்யப்பட்டன ?

(ஆ) உற்பத்தி செய்யப்பட்ட அரிக்கன் லைட்டுகள் யார் யார் மூலம் விற்பனை செய்யப்படுகின்றன?

(இ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டகாலத்திலே எந்தெந்த இடங்களிலே அரிக்கன் லைட்டுகள் உற்பத்தி தொழிற்சாலைகள் நிறுவப்படும் ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) The Production-*cum*-Service Centre for the manufacture of Hurricane lanterns at Palni has not yet commenced production.

(*b*) The question does not arise.

(*c*) The Government do not propose to start any other Centre for the manufacture of Hurricane lanterns under the Second Five-Year Plan.

Sri K. SATTANATHA KARAYALAR : இந்த அரிகேன் லைட் செய்யும் தொழிற்சாலைக்கு வேண்டிய மெஷின்கள் வந்து விட்டனவா? வரவில்லை என்றால் எப்பொழுது வந்து சேரும்?

The Hon. Sri R. VENKATARAMAN: மெஷின்கள் எல்லாம் வந்து விட்டன. இந்த மாதக் கடைசியிலாவது அல்லது அடுத்த மாதத்திலாவது ஆரம்பிக்கப்படும்.

Sri P. G. MANICKAM : இந்தத் தொழிற்சாலையில் எத்தனை பேருக்குப் பயிற்சி அளிக்க திட்டம் போடப்பட்டிருக்கிறது?

The Hon. Sri R. VENKATARAMAN : இது ட்ரெயினிங் ஸ்கீம். 10 "அப்பரெண்டிஸ்"க்கு" ட்ரெயினிங் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இதில் எவ்வளவு பேருக்கு வேலை கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

Sri A. GOVINDASAMY : இந்தத் தொழிற்சாலை கட்டப்பட்டு யந்திரங்கள் வந்து சேர்ந்தும் வேலை துவங்காததற்குக் காரணம் மின்சாரம் வழங்கப்படாததுதான் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

The Hon. Sri R. VENKATARAMAN : அப்படி ஒன்றும் இல்லை. சாதாரணமாக ஒரு மெஷின் வந்து, கட்டிடம் கட்டி அந்த இடத்திலே மெஷினைப் பொருத்தி வேலை ஆரம்பிப்பதற்குத் தாமதமே தவிர மின்சாரம் வழங்கப்படாததால் மட்டும் அது நின்று விடவில்லை.

### *Village chavadies*

* 430. *Q.*—Sri P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோயமுத்தூர் ஜில்லாவிலே எத்தனை கிராமச் சாவடிகள் (village chavadies) பழுதடைந்த நிலைமையிலிருக்கின்றன ?

The Hon. Sri V. RAMAIAH : Twenty nine chavadies are in need of repairs.